6-3

# ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தர் கோயில்




ஸ்ரீ சச்சிதானந்தபுரி சுவாமிகள்

**தோப்பூரணி, வ.சூரக்குடி, சிவகங்கை மாவட்டம்.**

குருவே நீரே சிவன்! நீரே விஷ்ணு! நீரே பிரம்மா! நீரே ஆதி கடவுள்! என்று இந்து மதம் கைகூப்பி, மெய்சிலிர்த்து, கண்ணீர் ததும்ப வணங்குகிறது.

ஒரு நல்ல குரு கிடைக்க மிகவும் பிரயத்தனப்பட வேண்டும். இடைவிடாது தேட வேண்டும். அந்த தேடல், உன்னை உயர்த்தும். அப்படி ஒரு உயர் நிலைக்கு வரும்போது, குருவே உன்னைத் தேடி வருவார்.

குருபிரம்மா குருவிஷ்ணு
குருதேவோ மஹேஸ்வர :
குருசாட்சாத் பரபிரம்மம்
தஸ்மைஸ்ரீ குருவேநம :

# ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தர் சுவாமிகள்
# (ஸ்ரீ சச்சிதானந்தபுரி சுவாமிகள்)
## வரலாறு

சிவகங்கை மாவட்டம், வ.சூரக்குடி கிராமம் அருகில் உள்ள தோப்பூரணி என்னும் பகுதியில் முற்காலத்தில் வன்னியராஜா என்ற குறுநில மன்னர் கோட்டை கட்டி வாழ்ந்தார். அவர் கோட்டை கட்டி வாழ்ந்ததற்கான கோட்டைச் சுவர்களின் அடித்தளப்பகுதிகள் இன்னும் அடையாளச் சின்னங்களாக இருக்கின்றன.

1942 ஆம் ஆண்டிற்கு முன்னர் சிவகங்கை மாவட்டம், ஆத்தங்குடி கிராமத்தில் திருநெல்வேலி மாவட்டம், சங்கரன்கோவில், சங்குபுரத்தைச் சேர்ந்த ஸ்ரீ சச்சிதானந்தபுரி சுவாமி அவர்கள் தன்னுடைய குரு காசி ஸ்ரீ ஞானானந்தபுரி சுவாமி அவர்களுக்கு குருமடம் அமைத்து பூஜைகள் செய்து வந்துள்ளார். சில காலம் கழித்து வ.சூரக்குடி அருகில் உள்ள தோப்பூரணியில் தற்போது ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தர் சுவாமிகள் கோயில் அமைந்துள்ள பகுதியை விலைக்கு வாங்கி அங்கேயே குடில் அமைத்து தங்கிவிட்டார். இந்த இடத்தில் நந்தவனம் அமைத்து பூக்களைக் கட்டி அருகில் உள்ள சிவன் கோயில்களுக்கு கொடுத்தும், தினசரி பூஜைகள் செய்தும் இறைப்பணியாற்றி வந்துள்ளார்.

மேலும் ஸ்ரீ சச்சிதானந்தபுரி சுவாமி அவர்கள் சுற்றுவட்டார மக்களுக்கு சித்த வைத்தியம் செய்து நோய்களை குணப்படுத்தி வந்துள்ளார். அய்யா அவர்கள் தூய வெள்ளை வேஷ்டி எப்போதும் அணிந்திருந்ததால், வெள்ளை வேஷ்டி சித்தர் என்று இப்பகுதி மக்களால் அழைக்கப்பட்டார்.

இவ்வாறு சிவன் வழிபாட்டிலும், பொதுத் தொண்டிலும் ஈடுபட்ட அய்யா ஸ்ரீ சச்சிதானந்தபுரி சுவாமி அவர்கள் 1947 ஆம் ஆண்டில் தற்போது கோயில் உள்ள இடத்தில் ஜீவ சமாதி ஆகிவிட்டார்கள்.

காரைக்குடி பர்மா காலனி, வள்ளுவர் நகரில் வசிக்கும் திரு.செல்லத்துரை - கலா தம்பதியினர் 6.5.2007 அன்று ஆத்தங்குடியிலிருந்து காரைக்குடிக்கு குறுக்குப்பாதையில் தோப்பூரணி வழியாக வந்துகொண்டிருந்தனர். அப்போது தோப்பூரணி குளக்கரையில் உள்ள பிள்ளையார் அமைந்துள்ள ஆலமரத்தடியில் சுமார் 60 வயது மதிக்கத்தக்க வ.சூரக்குடியைச் சேர்ந்த பெரியவர் திரு.ராமையா அவர்கள் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தார்.

மேற்படி முதியவரை, திரு.செல்லத்துரை-கலா தம்பதியினர் சந்தித்துப் பேசிக் கொண்டிருக்கும் பொழுது, தோப்பூரணியின் வரலாற்றை அவர்களுக்கு கூறிவிட்டு, என்னுடன் வாருங்கள் உங்களுக்கு ஒரு முக்கியமான இடத்தைக் காட்டுகிறேன் என்று சொல்லி புதர்கள் மண்டிக்கிடந்த ஒரு இடத்திற்கு கூட்டிச் சென்று அங்கே பாருங்கள் என்று அய்யா ஸ்ரீ சச்சிதானந்தபுரி சுவாமிகள் என்ற வெள்ளை வேஷ்டி சித்தர் அவர்களின் சமாதியை காண்பித்தார்.

அவர் காட்டிய இடத்தில் சுமார் 2 அடி உயரமுள்ள சிவலிங்கம் ஜோதி வடிவாக சிவரூபத்தில் காட்சியளித்தது. அப்பொழுது பகல் 12.30 மணி இருக்கும். அந்த வெயிலிலும் ஜோதி வடிவத்திலிருந்து வந்த ஒளி, இருவர் கண்களும் கூசும் அளவிற்கு சக்தி வாய்ந்ததாக இருந்தது. இந்த நிகழ்ச்சி தம்பதியினர் இருவரையும் மெய்சிலிர்க்க வைத்து அவர்களை பேரானந்தத்தில் ஆழ்த்தியது. அவர்கள் ஜோதியை வழிபட்டு அதே நினைவுடன் வீடு திரும்பினர். அன்று இரவு முழுவதும் தம்பதியினருக்கு ஜோதி வடிவ ஒளி வந்துகொண்டே இருந்தது.

மறுபடியும் மூன்று நாட்கள் கழித்து தம்பதியினரை அந்த இடத்திற்கு செல்லும்படி ஓர் உள்ளுணர்வு தூண்ட, தம்பதியினர் மீண்டும் 10.5.2007 அன்று தோப்பூரணிக்கு வந்தனர். ஜோதி வடிவம் தெரிந்த பீடத்தைச் சுற்றி உள்ள முட்புதர்களை வ.சூரக்குடி திரு.நாகராஜ் என்பவரை வைத்து சுத்தம் செய்தனர். சுமார் 2 அடி உயரத்திற்கு காட்சி அளித்த சிவலிங்கம் 5இன்ச் அளவிற்கு சிறிய சிவலிங்கமாக இருந்தது. சிவலிங்கத்திற்கு தம்பதியினர் அபிஷேகம், பூஜை செய்து வழிபட்டார்கள். பின்னர் வ.சூரக்குடி ஊராட்சித் தலைவர் திருமதி.கவிதா காளிமுத்து மற்றும் முக்கியஸ்தர்களை சந்தித்து நடந்த விபரங்களைச் சொன்னார்கள். அன்று முதல் ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தர் சமாதியில் உள்ள சிவலிங்கத்திற்கு தினமும் அபிஷேகம், பூஜைகளை இத் தம்பதியினர் செய்து வருகின்றனர்.

முதல் குரு பூஜை 11.11.2007 அன்று ஹோமம் செய்து, அன்னதானத்துடன் சிறப்பாக நடத்தப்பட்டது. தொடர்ந்து ஒவ்வொரு வருடமும் குரு பூஜை ஐப்பசி மாதம் மூல நட்சத்திரத்தில் ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தருக்கு அன்னதானத்துடன் சிறப்பாக நடைபெற்று வருகிறது. ஒவ்வொரு மஹா சிவராத்திரி அன்று இரவு முழுவதும் நான்கு கால பூஜைகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

**அன்னதானம்**

ஆன்மீக அன்பர்கள் உதவியுடன் மார்ச் 2009 ஆம் ஆண்டு முதல் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை மதியம் அன்னதானம் சிறப்பாக நடைபெறுகிறது. 2010 ஆம் ஆண்டு முதல் ஒவ்வொரு அமாவாசை, பௌர்ணமி அன்று பகலில் ஹோமம், அபிஷேகம், பூஜைகள், அன்னதானம் மிக சிறப்பாக நடைபெற்று வருகிறது.

**அபிஷேகம், பூஜை நேரம்**

தினமும் காலை 8.00 மணிக்கு அபிஷேகம், பூஜைகள் நடைபெறுகிறது. அமாவாசை, பௌர்ணமி அன்று பகல் 10.00 மணியளவில் ஹோமம், அபிஷேகம், 108 சங்காபிஷேகம், பூஜைகள் நடைபெறுகிறது.

**குரு பூஜை**

ஒவ்வொரு ஆண்டும் ஐப்பசி மாதம் மூல நட்சத்திரம் அன்று குரு பூஜை நடைபெறும்.

**வருஷாபிஷேகம்**

ஒவ்வொரு ஆண்டும் மே மாதம் 6 தேதி வருஷாபிஷேகம் சிறப்பாக நடைபெறும்.

**இருப்பிடம்**

காரைக்குடியிலிருந்து சுமார் 7 கி.மீ. தொலைவில் காரைக்குடி - திருச்சி பைபாஸ் ரோட்டில் சாலையின் இடப்புறம், காணும் தூரத்தில் இரண்டு ஆலமரங்கள் தெரியும். அதன் நடுவில் ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தர் கோயில் அமைந்து இருக்கிறது.

**பேருந்து வசதி**

காரைக்குடி பழைய பேருந்து நிலையத்திலிருந்து, நேமத்தான்பட்டி செல்லும் மினி பஸ்கள் **GBS** மற்றும் **KRM** உள்ளன. இவற்றில் ஏறி ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தர் கோயிலில் இறங்க வேண்டும்.

புதுக்கோட்டையிலிருந்து வருபவர்கள், கானாடுகாத்தனில் இறங்கி காரைக்குடி செல்லும் மினி பஸ்கள் **GBS** மற்றும் **KRM** உள்ளன. இவற்றில் ஏறி ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தர் கோயிலில் இறங்க வேண்டும். இரு மார்க்கத்திலும் அரை மணி நேரத்திற்கு ஒரு மினி பஸ் வசதி உள்ளது.

பக்தர்கள் ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தர் கோயிலுக்கு வருகை தந்து சித்தரை தரிசித்து அன்னதானத்தில் கலந்துகொண்டு எல்லா நலமும் வளமும் பெற்று வாழ வேண்டுகிறோம்.

தொடர்புக்கு :-

**M.செல்லத்துரை**

**ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தர் சுவாமிகள் அறக்கட்டளை**

தோப்பூரணி, வ.சூரக்குடி

காரைக்குடி-திருச்சி பைபாஸ் ரோடு

காரைக்குடி (தாலுகா), சிவகங்கை மாவட்டம்.

தமிழ்நாடு, இந்தியா.

செல் : 9788105493

Web Site : www.srivellaiveshttisiddhar.org

Email ID : srivvsiddar@gmail.com

Bank A/c : STATE BANK OF INDIA, KARAIKUDI.

SRI VELLAI VESHTTI SIDDAR SWAMIGAL TRUST

**SB A/C No. 31818327224**


நூல் வெளியீடு :-

ஸ்ரீ வெள்ளை வேஷ்டி சித்தர் சுவாமிகள் அறக்கட்டளை

14.7.2011

திருத்தம் செய்யப்பட்ட மறு பதிப்பு :- 1.10.2012

1.11.2015



அன்னதானம்

